


உ

ஸ்ரீ வைஷ்ணவி துணை

அஷ்டமாதா ஸஹித

# ஸ்ரீ ராஜ ராஜேச்வரி

## படவிளக்கமும், பூஜா விதானச் சுருக்கமும்

[ ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் மனமுவந்தளித்த
ஸ்ரீமுகத்துடனும், ஸ்ரீ ராஜராஜேச்வரி படத்துடனும் கூடியது]

நூல் ஆசிரியர் :
அருட்கவி S. V. ஸேதுராமன்






வெளியிடுவோர் :
ஸ்ரீ D. பங்காரு செட்டியார்,
“முரளி டிரேடர்ஸ்”,
220, திருவொற்றியூர் நெடுஞ்சாலை,
தண்டையார்பேட்டை,
சென்னை-21.

 ஆகஸ்ட் 1967 [ விலை 25 காசுகள்

# மலை வளர் காதலி

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி எழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி ஸஹஸ்ரதள
புஷ்பமிசை வீற்றி ருக்கும்

நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சக்தி என்றுன்
நாமமே உச்சரித் திடுமடியர் நாமமே
நானுச்ச ரிக்க வசமோ?

ஆரணி சடைக்கடவுள் ஆரணி எனப்புகழ
அகிலாண்ட கோடி ஈன்ற
அன்னையே! பின்னையுங் கன்னியென
[மறைபேசும்
ஆநந்த ரூப மயிலே!

வாரணியும் இருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவை அரசே!
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெண் உமையே!

— தாயுமான சுவாமிகள்

MAHENDRI

CHAMUNDI

MAHESWARI

VAISHNAVI

MURALI TRADERS &
NATIONAL INDUSTRIES

COSMETICS & SOAPS MFGRS.
MADRAS - 21

VARAHI

BRAHMI

MAHALAKSHMI

## அஷ்ட மாதா ஸஹித ஸ்ரீ ராஜராஜேச்வரி

[ இப்படம் பூஜைக்குகந்த (20"×30") அளவில் அழகிய பல வண்ண ஓவியமாக உயர்ந்த ஆர்ட் பேப்பரில் வெளியிடப்பெற்றுள்ளது. வேண்டுவோர் மேற்கண்ட விலாசத்துடன் தொடர்புகொள்க.]

அருட்கவி S. V. ஸேதுராமன்
5000 பிரதிகள்

( ஆகஸ்ட் 1967 )

இந்நூல் கிடைக்குமிடம் :
ஸ்ரீ D. பங்காரு செட்டியார்
"முரளி டிரேடர்ஸ்"
220, திருவொற்றியூர் நெடுஞ்சாலை
தண்டையார்பேட்டை
சென்னை - 21

---

ASHTA MATHA SAHITHA SRI RAJA RAJESWARI PADA VILAKKAMUM, POOJA VIDHANA CHURUKKAMUM



---

எவெரடி அச்சகம், சென்னை-17.

உ

ஸ்ரீ வைஷ்ணவி துணை

3-3

அஷ்டமாதா ஸஹித

# ஸ்ரீ ராஜ ராஜேச்வரி

## படவிளக்கமும், பூஜா விதானச் சுருக்கமும்

[ ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் மனமுவந்தளித்த
ஸ்ரீமுகத்துடனும், ஸ்ரீ ராஜராஜேச்வரி படத்துடனும் கூடியது]

நூல் ஆசிரியர் :
அருட்கவி S. V. ஸேதுராமன்



வெளியிடுவோர் :
ஸ்ரீ D. பங்காரு செட்டியார்,
"முரளி டிரேடர்ஸ்,"
220, திருவொற்றியூர் நெடுஞ்சாலை,
தண்டையார்பேட்டை,
சென்னை-21.

 ஆகஸ்ட் 1967 [ விலை 25 காசுகள்

ஸ்ரீ:

## ஸ்ரீமுகம்

*(ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள் அருளியது)*




ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகா சார்யவர்ய
ஸ்ரீமத் சங்கர பகவத் பாத ப்ரதிஷ்டித
ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிப ஜகத்குரு
ஸ்ரீமத் சந்த்ர சேகரேந்த்ர ஸரஸ்வதீ
ஸ்ரீபாதாதேசாநுஸாரேண
ஸ்ரீமத் ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீபாதை: க்ரியதே
நாராயண ஸ்ம்ருதி: |

அஷ்ட மாதாக்களுடன் (ப்ராம்மீ முதலிய ஸப்தமாதாக்கள், மஹாலக்ஷ்மீ) சூழப்பட்டுப் பூஜார்ஹமாக வரையப்பட்டுள்ள ஸ்ரீராஜராஜேச்வரியின் படத்தின் விசேஷங்களைப் பக்தர்கள் அறிந்து கொள்வதற்காக அருட்கவி ஸ்ரீ ஸேதுராமனால் எழுதப்பட்டுள்ள இந்நூலில் இப்படத்தில் அடங்கிய மாதாக்களின் லக்ஷணங்கள் (கைகளிலுள்ள ஆயுத விசேஷங்கள் முதலியன), இவர்களுடன் ஸ்ரீராஜராஜேச்வரியைப் பூஜிப்பதனால் ஏற்படும் விசேஷப் பயன்கள், தினஸரி பூஜாமுறை முதலிய விஷயங்கள் நன்கு விவரிக்கப்பட்டிருக்கின்றன.

பக்தர்கள் இந்நூலின் மூலம் அம்பாளின் மஹிமையை உணர்ந்து, பூஜித்து இம்மை மறுமைப் பயன்களை அடைவார்களாக.

யாத்ராஸ்தானம்,
ப்ரோததூர் (கடப்பை ஜில்லா)
பராபவ பௌஷ சுத்த பஞ்சமி

நாராயண ஸ்ம்ருதி:

நூலாசிரியரின்

# முகவுரை

'ஸ்ரீராஜ ராஜேச்வரி படவிளக்கமும், பூஜாவிதானச் சுருக்கமும்' என்னும் இந்நூலை ஸ்ரீ பாலகவி M. K. வேங்கட ராமச் செட்டியாரவர்களின் பெருந்தூண்டுதலின் பேரில் எழுதலானேன். அவரை இது விஷயத்தில் ஊக்குவித்தவர்கள் முரளி ஸோப் ஒர்க்ஸ் ஸ்ரீபங்காரு செட்டியாரவர்களாவார்கள். ஒன்றுக்கும் பற்ருத என்னைக்கொண்டு தன்னைப் பற்றிய ஒரு நூல் வெளிவரச் செய்துகொண்ட பரதேவதை ஸ்ரீ ராஜராஜேச்வரி தேவிக்கும், இந்நூலுக்கு அழகியதொரு ஸ்ரீ முகம் அருளிய காஞ்சீ காமகோடி பீடாதிபதிகள் ஜகத் குருமார் இருவருக்கும், இந்நூலைத் தொடக்க முதல் இறுதி வரை ஆழ்ந்து பார்வையிட்டு அரிய திருத்தங்களையும், கருத்துக்களையும் தெரிவித்துதவியவரும், காலஞ்சென்ற குஹாநந்த மண்டலி ஸ்தாபகர் அருட்கவி ஸ்ரீமான் ந. சுப்ரம்மண்ய ஐயரவர்களது மாப்பிள்ளையும், சீடருமான ஸ்ரீமான் G. N. வேங்கட நரஸையா அவர்களுக்கும், இந்நூல் வெளிவரப் பெரும்பங்கு உழைத்த என் அருமைத் தம்முனர் அருளிசை ஸ்ரீ S. V. சுப்ரம்மண்யம் அவர்களுக்கும், என்னை ஊக்குவித்த ஸ்ரீ பாலகவி அவர்களுக்கும், இந்நூலை நன்முறையில் அச்சிட்டளித்த 'எவரெடி அச்சகத்தார்'க்கும் என் மனமார்ந்த நன்றியும் வணக்கமும் உரியன.

இந்நூலை அச்சிட்டு வெளியிடும் ஒய்ட் ஹார்ஸ் ஸோப் (White Horse Soap) உரிமையாளர் ஸ்ரீ பங்காரு செட்டியாரவர்களின் தெய்வத் தொண்டைப் பெரிதும் பாராட்டி, அவர்கட்கும் நன்றியும், வணக்கமும் தெரிவிக்கின்றேன்.

இந்நூல், ராஜராஜேச்வரி படத்தை வைத்துப் பூஜை செய்பவர்கட்கு ஓரளவு நிச்சயம் பயன்படும் என்பது என் முழு நம்பிக்கை.

இதன்கண் பிழையுளதேற் பெரியவர்கள் பொறுத்தருள்வார்களாக.

100, கல்லூரிச் சாலை,<br>சென்னை-61.<br>2—8—67.

S. V. சேதுராமன்

ஸ்ரீ வைஷ்ணவி துணை

# ஸ்ரீ ராஜ ராஜேச்வரி

ஸ்ரீ ராஜ ராஜேச்வரி லோக மாதா. குழந்தை பேசத் தொடங்கியதும் 'அம்மா' என்றுதான் முதன் முதலில் அழைக்கிறது. பசுங்கன்று 'அம்மா' என்றுதான் தாய்ப் பசுவைக் கூப்பிடுகிறது. பிச்சைக்காரன் கூட வீட்டு வாசலில் நின்று 'அம்மா' என்று கூப்பிட்டுத்தான் பிச்சை கேட்கிறான். நம் கண்முன் தோன்றும் இயற்கைச் சக்தியைக்கூட அன்னை யாகத்தான் சாத்திரங்கள் காட்டுகின்றன. இயற்கை அன்னையின் மடியில்தான் நாம் வளர்ந்து வருகிறோம். அப்படித் தாய் வடிவிலிருக்கும் தெய்வத்தின் திருவருளால் தான் நாம் உயர்நிலை பெறமுடியும். அங்ஙனம் ஜகந்மாதா வான ராஜ ராஜேச்வரி ஸர்வ ஜீவராசிகளுக்கும் அருள் பாலிக்கும் தாயாகக்—கருணை வடிவாக—விளங்குகிறாள். பரதெய்வமான அவளுடைய அம்ச தேவதைகளான அஷ்ட மாத்ருகைகளும்கூட அடியார்களுக்கு அருள் பொழியும் பொருட்டு அவளைச் சூழ்ந்து நிற்கிறார்கள்.

'ப்ராம்ஹீ மாஹேச் வரீசைவ கௌமாரீ வைஷ்ணவீ ததா |

வாராஹீ சைவ சேந்த்ராணீ சாமுண்டீ ஸப்த மாதர: ||"

இவர்களோடு மஹாலக்ஷ்மியும் சேர்ந்து அஷ்டமாத் ருகைகளாகின்றனர். அஷ்டமாத்ருகைகளும் பரதேவதை

யைச் சூழ்ந்து நின்று வழிபட்டுக்கொண்டு, அப்படியே அடியார்களுக்கும் அருள்பாலித்துக் கொண்டுமிருக்கிறார்கள்.

### அஷ்ட மாத்ருகைகள் அல்லது மாதாக்கள்

1. ப்ராஹ்மி
2. மாஹேச்வரி
3. கௌமாரி
4. வைஷ்ணவி
5. வாராஹி
6. மாஹேந்த்ரி
7. சாமுண்டி
8. மஹாலக்ஷ்மி

**1.** ப்ராஹ்மி : ப்ரஹ்மாவின் சொரூபமான சக்தி; வெண்ணிற ஆடை புனைந்தவள்; ஜெப மாலையும், ஓலைப் புத்தகமும் ஏந்தியவள்; அபயமும் வரதமும் கொண்டவள். இவளைத் தொழுவார்க்குக் கல்வியும் புலமையும் உண்டாகும்; தூய உள்ளம் அமையும்.

**2.** மாஹேச்வரி : ஈச்வரனின் சொரூபமான சக்தி; ஐச்வர்யத்துக்கு உடையவள்; தமோகுணங்களை யெல்லாம் ஸம்ஹரிப்பவள்; அக்கினியும், மானும், அபயமும் வரதமும் தோன்ற இருப்பவள்; இவளைத் துதித்தால் *'மஹேச்வரத்வம்' சித்திக்கும்; தலைமைப் பதவிகளெல்லாம் கிடைக்கும்; துர்க்குணங்களெல்லாம் அழிந்துபடும்.

**3.** கௌமாரி : குமாரக் கடவுளாம் ஸுப்ரம்மண்ய ஸ்வாமியின் சொரூபமான சக்தி; சக்தி வேலும், வஜ்ராயுதமும், அபயமும், வரதமும் உடையவள்; இவளை வணங்குவார்க்கு வீரமும், நிர்ப்பயமும் ஏற்படும்.

**4.** வைஷ்ணவி : விஷ்ணுவின் சொரூபமான சக்தி; ஸர்வ வ்யாபகத்வம் உடையவள் (எங்கும் பரந்து உள்ளவள்); சங்கும், சக்கரமும் தாங்கியவள்; அபயமும், வரதமும் கொண்டவள்; இவளை வணங்குவார்க்குப் பரந்த மனப்பான்மையும், வெற்றிகரமான வாழ்க்கையும் அமையும்.

---

*ஐச்வர்யம், தர்மம், யசஸ், ஸ்ரீ, ஸர்வக்ஞத்வம், வைராக்யம் என்னும் (ஈசுவரனுடைய) ஆறு ஐச்வர்யங்களையும் பெற்றிருத்தலே 'மஹேச்வரத்வ'மாம்.

5. வாராஹி : வராஹமூர்த்தியான விஷ்ணுவின் சொரூபமானவள்; மஹாசக்தி வாய்ந்தவள்; உடுக்கையும், பாசமும் ஏந்தியவள்; அபயமும் வரதமும் காட்டுபவள்; இவளைப் பணிந்தால் பூமியை ஆளும் பேறு கிட்டும். மிருகங்களால் ஏற்படும் துன்பங்கள் இல்லையாகும்; ஞானம் சித்திக்கும்.

6. மாஹேந்த்ரி : தேவேந்திரனுடைய சொரூபமான சக்தி; குலிசம் என்னும் வஜ்ராயுதமும், ஈட்டியும், இரு மேற் கைகளில் தாங்கியவள்; அபயமும், வரதமும் இரு கீழ்க் கைகளில் கொண்டு விளங்குபவள்; இவளைத் தொழுவார்க்குத் தேவேந்த்ர போகங்களெல்லாம் எளிதில் சித்திக்கும்.

7. சாமுண்டி: இவள் ருத்ர சொரூபமான சக்தி; சண்டன், முண்டன் ஆகிய இரு அசுரர்களையும் கொன்றவள்; சாமுண்டிமலை மைசூரில் பிரசித்தமானது; உடுக்கையும், பாசமும், சூலமும், கபாலமும் கொண்டவள்; இவளைத் தொழுதால் பாபம், கோபம் ஆகிய அசுர குணங்கள் அழியும்.

8. மஹாலக்ஷ்மி : இவள் செல்வத்துக்கு அதிதேவதை; மேலிரண்டு கைகளிலும் செந்தாமரையும், கீழிரண்டு கைகளிலும் அபயமும், வரதமும் பெற்றவள்; இவளை வழிபட்டால் லக்ஷ்மிகரம் கொழிக்கும்; *அஷ்டலக்ஷ்மி பாக்யங்களும் உண்டாகும்.

இந்த அஷ்ட மாத்ருகைகளும் புடைசூழச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கின்ருள் தேவி. சந்திர கலையைத் தலையில் தரித்துள்ளாள். தாமரை போன்ற இரு கண்களோடு நெற்றியிலும் ஒரு கண் கொண்டுள்ளாள். மேலிரண்டு கைகளிற் பாசமும், அங்குசமும் ஏந்தியுள்ளாள். இடது கீழ்க் கையில் கரும்பு வில்லைத் தாங்கியிருக்கிருள். வலது கீழ்க் கையில் தாமரை, அசோகு, மா, முல்லை, நெய்தல் (நீலோற்பலம்) என்னும் ஐந்து புஷ்ப பாணங்களை வைத்துக்

*ராஜ்ய, கீர்த்தி, சௌர்ய, தன, தான்ய, தைர்ய, விஜய, வித்யா லக்ஷ்மிகள்.

கொண்டிருக்கிருள். இவ்வாறு கொலுவீற்றிருக்கின்ருள் ஸ்ரீ ராஜ ராஜேச்வரி.

அஷ்டமாத்ருகைகளுக்கும் தலைவியாகவும், ஆநந்தமாகவும், ஸிம்ஹாஸனேச்வரியாகத் திருவோலக்கக் காட்சி கொடுக்கும் இந்தப் பரதேவதையின் சிரத்திலுள்ள பிறைச் சந்திரன் அன்பர்களின் அஞ்ஞான இருளைப் போக்கும். அக்நியேயான நெற்றிக் கண் பாபங்களையெல்லாம் எரித்தொழிக்கும்; சூர்ய, சந்திரர்களேயான இரண்டு நேத்ரங்களும் ஸகல உலக இச்சைகளையும் பூர்த்தி செய்வித்து முத்தி நெறியிற் சேர்க்கும்; அங்குசம் ஆன்மாக்களின் ஆணவத்தை அடக்கும்; பாசம், பாசபந்தங்களை அழித்து அன்பு வலைக்குட்படுத்தும்; மன்மதனின் பஞ்ச புஷ்ப பாணங்கள் காமத்தை உண்டாக்கும்; தேவியின் வலது கையிலுள்ள மலர்ப் பாணங்கள் ஐந்தும் காமத்தை வெல்லச் செய்து, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களையும் பக்தி நெறியிற் செலுத்தும். அதாவது சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தம் என்னும் ஐம்புலன்களை நோக்கிச் சென்று அவற்றுள் மூழ்கும் மனத்தை அவற்றினின்று திருப்பித் தேவியின் அருள் பெறுதற்கு உரிய வழியில் செலுத்தும் என்பதாம். தேவியின் இடது கையிலிருக்கும் கரும்பு வில் மனமேயாகும். புஷ்ப பாணங்கள் பஞ்சதந்மாத்ரைகள். "மநோரூபேக்ஷு கோதண்டா பஞ்சதந்மாத்ர ஸாயகா"—லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்.

கரும்புவில் பக்தர்களின் மனத்தைத் தேவியின்பால் இழுக்கும். அபயம் அளித்தலையும், வரங்கள் கொடுத்தலையும் அவள் இரு திருவடிகளே செய்து முடிக்கும்.* அடியார்களின் பயங்களைப் போக்கி, அவர்கள் கேட்ட வரங்களைக் கொடுக்கும். இரு திருவடித் தாமரைகளும் நம்மை முத்தி வீட்டிற் சேர்க்கும். அவை பரஞாநம் என்னும் கடவுளைப் பற்றிய ஞாநத்தையும், அபர ஞாநம் என்னும் உலகத்தைப் பற்றிய ஞாநத்தையும் அருளவல்லவை.

---

*ஸௌந்தர்யலஹரி—சுலோகம் 4.

ஈச்வரி என்ருல் ஈச்வர சக்தி என்றும், ஐச்வர்யத்துக்கு உரியவள் என்றும் பொருள்படும். ராஜ ஈச்வரி என்ருல் அரசபோகம் உடையவர்களுக்கும் தலைவி என்பதாம். ராஜ ராஜ ஈச்வரி என்னும் சொல் மன்னர்களின் தலைவஞன சக்ரவர்த்திக்கும் தலைவி என்று பொருள்தரும்.

ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன், மஹேச்வரன், ஸதாசிவன் என்னும் தெய்வங்களுக்கும் ஆதிதெய்வமாயிருக்கும் பராம் பிகையே, ஆதிபராசக்தி யாகும். ஆகையால் இவளைப் பூஜித்தால் எல்லாத் தெய்வங்களையும் பூஜித்த பலன் கிட்டும். ராஜராஜேச்வரியைப் பூரண நம்பிக்கையுடன் பூஜை செய்ய வேண்டும்; மலர்கள் தூவி அர்ச்சித்து வழி படவேண்டும் ; கந்த, புஷ்ப, தூப, தீப, நைவேத்ய மாகிற பஞ்சோபசாரங்களுடன் தீபாராதனை முதலியவை களாலும் வழிபட வேண்டும்; வாயாரத் தோத்திரம் சொல்லித் துதிக்க வேண்டும்.

## தோத்திரங்கள்

"அம்பா சாம்பவீ சந்த்ரமௌளீ ரபலா
அபர்ணு உமா பார்வதீ
காளீ ஹைமவதீ சிவா த்ரிநயநீ
காத்யாயநீ பைரவீ
ஸாவித்ரீ நவயௌவனு சுபகரீ
ஸாம்ராஜ்ய லக்ஷ்மீ ப்ரதா
சித்ருபீ பரதேவதா பகவதீ
ஸ்ரீ ராஜ ராஜேச்வரீ"

—ஸ்ரீ ராஜ ராஜேச்வரீ அஷ்டகம் -- 1

"மனமும்நீ வெளியும்நீ வளியும்நீ
கனலும்நீ மறிபுனலும்நீ புவியும்நீ
நினையில்நீ பரம்அற வளர்ந்து ஒளி
பரந்துவிடில் நீஅன்றி ஒன்றும் உளதோ?

உனதுமா ஞா நஆ நந்தஉரு வைப்புவன
உருவென வகுத்தருளவோ?
அனையுமாய் மகவும்ஆ மாறுபோல் நீசக்தி
அருணவடி வாயது உமையே''

—ஸௌந்தர்ய லஹரிப் பாடல் 35

“தனந்தரும் கல்வி தருமொரு நாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவுந் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாந் தருமன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாள்அபி ராமி கடைக்கண்களே''

—அபிராமி அந்தாதி 69

[அவரவர்கட்குத் தெரிந்த, விருப்பமான இவை போன்ற வேறு தோத்திரங்களையும் சொல்லிக்கொள்ளலாம்.]

## தினசரி பூஜை முறை

ஆசமனம்: அச்யுதாய நம: அநந்தாய நம: கோவிந்தாய நம:

### விக்நேச்வர பூஜை

(மஞ்சள் பொடியினால் விநாயகரைப் பிடித்து வைத்துக் கொள்ளவும்.)

சுக்லாம்பர தரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம்
ப்ரஸந்ந வதனம் த்யாயேத் ஸர்வவிக்நோப சாந்தயே.

அஸ்மிந் ஹரித்ரா பிம்பே
ஸ்ரீ மஹாகணபதிம் த்யாயாமி
,, ஆவாஹயாமி

மஹாகணபதயே நம: ஆஸநம் ஸமர்ப்பயாமி
,, பாதயோ: பாத்யம் ஸமர்ப்பயாமி
,, அர்க்யம் ஸமர்ப்பயாமி
,, ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
,, ஸ்நானம் ,,
,, ஸ்நானாநந்தரம் ஆசமநீயம் ,,
வஸ்த்ரார்த்தம் அக்ஷதாம் ஸமர்ப்பயாமி
யக்ஞோப விதார்த்தம் ,, ,,
உத்தரீயார்த்தம் ,, ,,
ஆபரணார்த்தம் ,, ,,
அலங்கரணார்த்தம் திவ்யகந்தான் தாரயாமி
கந்தஸ்யோபரி ஹரித்ரா குங்குமம் ஸமர்ப்பயாமி
புஷ்பாணி பூஜயாமி

| | |
|---|---|
| ஸுமுகாய நம: | தூமகேதவே நம: |
| ஏகதந்தாய நம: | கணாத்யக்ஷாய நம: |
| கபிலாய நம: | பாலசந்த்ராய நம: |
| கஜகர்ணகாய நம: | கஜானனாய நம: |
| லம்போதராய நம: | வக்ரதுண்டாய நம: |
| விகடாய நம: | ஸுர்ப்பகர்ணாய நம: |
| விக்நராஜாய நம: | ஹேரம்பாய நம: |
| கணாதிபாய நம: | ஸ்கந்தபூர்வஜாய நம: |

ஸ்ரீ மஹா கணபதயே நம:
ஷோடச நாமார்ச்சன பூஜாம் ஸமர்ப்பயாமி
நானாவித பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி
தூப மாக்ராபயாமி (சாம்பிராணி, ஊதுபத்தி காட்டவும்)
தீபம் தர்சயாமி (நெய்த் தீபம் காட்டவும்)
தூபதீபாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
குளோபகாரம் (வெல்லம்) நிவேதயாமி (நைவேத்யம் செய்யவும்)
நிவேதனா நந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
தாம்பூலம் ஸமர்ப்பயாமி (வெற்றிலே பாக்கு நிவேதிக்கவும்)
(கர்ப்பூரத்தை ஏற்றிக்கொண்டு)

"நீராஜனம் ஸுமாங்கள்யம் ஸர்வ மங்கள காரணம்
க்ருஹாண பரயா பக்த்யா அர்ப்பிதம் தே விநாயக"
ஸ்ரீ மஹா கணபதயே நம:
கர்ப்பூர நீராஜனம் ஸந்தர்சயாமி
நீராஜனாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
ஸர்வோபசாரான் ஸமர்ப்பயாமி
நமஸ்காரான் ,,
ஹரித்ரா பிம்ப மஹா கணபதிம் யதாஸ்தாநம்
ப்ரதிஷ்டாபயாமி (மஞ்சட் பிள்ளையாரைக் கொஞ்சம் வடக்கே நகர்த்தவும்)

## கலச பூஜை

(கலசத்திற்குச் சந்தன குங்குமப் பொட்டுகளிட்டுக் கலச நீரில் சந்தனம் புஷ்பம் அக்ஷதை இவற்றைப் போட்ட பின் கூறவும்)

'கலசஸ்ய முகே விஷ்ணு: கண்டே ருத்ர ஸமாச்ரிதா:
மூலே தத்ர ஸ்திதோ ப்ரஹ்மா மத்யே மாத்ரு கணாஸ்ம்ருதா:
குக்ஷௌது ஸாகராஸ் ஸர்வே ஸப்த த்வீபா வஸுந்தரா
ரிக்வே தோத யஜுர் வேதோ ஸாம வேதோப் யதர்வண:
அங்கைஸ்ச ஸஹிதா ஸர்வே கலசாம்பு ஸமாச்ரிதா:"
"கங்கேச யமுனே சைவ கோதாவரி ஸரஸ்வதீ
நர்மதே ஸிந்து காவேரீ ஜலேஸ்மிந் ஸந்நிதிம் குரு"
ஆயாந்து தேவீ பூஜார்த்தம் துரித க்ஷய காரகா:
பூஜா த்ரவ்யாணி ப்ரோக்ஷ்யா; தேவதாத்மா நஞ்ச ப்ரோக்ஷ்யா.

(கலசநீரைப் பூஜைப் பொருள்கள் மீதும் தேவியின் மீதும் தெளிக்கவும். தன் மீதும் தெளித்துக் கொள்ளவும்.)

# ஸ்ரீ ராஜ ராஜேச்வரி பூஜை

ப்ராஹ்மீ, மாஹேச்வரீ, கௌமாரீ. வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டீ, மஹாலக்ஷ்மீ ஸஹித

ஸ்ரீ ராஜ ராஜேச்வரீம் த்யாயாமி
,, ஆவாஹயாமி

ராஜ ராஜேச்வர்யை நம: ஆஸநம் ஸமர்ப்பயாமி
,, பாதயோ: பாத்யம் ,,
,, அர்க்யம் ,,
,, ஆசமநீயம் ,,
,, ஸ்நானம் ,,
,, ஸ்நானுநந்தரம் ஆசமநீயம் ,,
வஸ்த்ரார்த்தம் அக்ஷதான் ,,
யக்ஞோப வீதார்த்தம் அக்ஷதான் ,,
உத்தரீ யார்த்தம் ,, ,,
ஆபரணார்த்தம் ,, ,,
அலங்கரணார்த்தம் திவ்யகந்தான் தாரயாமி
கந்தஸ்யோபரி ஹரித்ரா குங்குமம் ஸமர்ப்பயாமி
புஷ்பாணி பூஜயாமி

### அஷ்ட மாத்ருகா அர்ச்சனை

| | |
|---|---|
| ப்ராஹ்ம்யை நம: | வாராஹ்யை நம: |
| மாஹேச்வர்யை நம: | மாஹேந்த்ர்யை நம: |
| கௌமார்யை நம: | சாமுண்டாயை நம : |
| வைஷ்ணவ்யை நம: | மஹாலக்ஷ்ம்யை நம: |

## தேவி அர்ச்சனை

### கௌரி அஷ்டோத்தர சதநாமாவளி

(ஒவ்வொரு நாமத்தின் பின்னும் நம: என்று சொல்லிக் கொள்ளவும்)

மஹா மநோந்மநீ சக்த்யை நம:
சிவ சக்த்யை
சிவங்கர்யை
இச்சாசக்தி க்ரியாசக்தி [க்ஞாநசக்திஸ்வரூபிண்யை
சாந்த்யதீத கலாநந்தாயை
சிவமாயாயை
சிவப்ரியாயை
ஸர்வக்ஞாயை
ஸுந்தர்யை
ஸோம்யாயை 10
ஸச்சிதாநந்த ரூபிண்யை
பராபராமய்யை

பாலாயை
த்ரிபுராயை
குண்டல்யை
சிவாயை
ருத்ராண்யை
விஜயாயை
ஸர்வாயை
சர்வாண்யை 20

புவநேச்வர்யை
கல்யாண்யை
சூலின்யை
காந்தாயை
மஹாத்ரிபுரஸுந்தர்யை
மாலின்யை
மானின்யை
மதனோல்லாஸமோஹின்யை
மஹேச்வர்யை
மாதங்க்யை 30

சிவகாம்யை
சிதாத்மிகாயை
காமாக்ஷ்யை
கமலாக்ஷ்யை
மீநாக்ஷ்யை
ஸர்வஸாக்ஷிண்யை
உமாதேவ்யை
மஹாகாள்யை
ஸாமாயை
ஸர்வஜனப்ரியாயை 40

சித்புராயை
சித்கநாநந்தாயை
சிந்மய்யை
சித்ஸ்வரூபிண்யை
மஹாஸரஸ்வத்யை
துர்க்காயை
ஜ்வாலாதுர்க்காதி
[மோஹின்யை
நகுல்யை
சுத்தவித்யாயை
ஸச்சிதாநந்த விக்ரஹாயை 50

ஸுப்ரபாயை
ஸுப்ரபாஜ்வாலாயை
இந்த்ராக்ஷ்யை
ஸர்வமோஹின்யை
மஹேந்த்ரஜால மத்யஸ்தா
[யை
மாயாயை
மாயாவிநோதின்யை
விச்வேச்வர்யை
வ்ருஷாரூடாயை
வித்யாஜால விநோதின்
[யை 60

மந்த்ரேச்வர்யை
மஹாலக்ஷ்ம்யை
மஹாகாளீ பலப்ரதாயை
சதுர்வேத விசேஷக்ஞாயை
ஸாவித்ர்யை
ஸர்வதேவதாயை
மஹேந்த்ராண்யை
கணாத்யக்ஷாயை
மஹாபைரவபூஜிதாயை
மஹாமாயாயை 70

மஹாகோராயை
மஹாதேவ்யை
மலாபஹாயை
மஹிஷாஸுர ஸம்ஹார்யை
சண்டமுண்ட குலாந்தகா
[யை
சக்ரேச்வர்யை
சதுர்வேத்யை
ஸர்வதாயை
ஸுரநாயிக்யை
ஷட்சாஸ்த்ர நிபுணாயை 80

நித்யாயை
ஷட்தர்சன விசக்ஷணாயை
காலராத்ர்யை
கலாதீதாயை
கவிராஜமனோஹராயை
சாரதா திலகாகாராயை
தீராயை
தீரஜனப்ரியாயை
உக்ரமார்யை
மஹாமார்யை 90

க்ஷிப்ரமார்யை
ரணப்ரியாயை
அன்னபூர்ணேச்வர்யை
மாத்ரே
ஸ்வர்ணகார தடித்ப்ரபாயை
ஸ்வரவ்யஞ்ஜன வர்ணேத
[யாயை

கத்யபத்யாதி காரணாயை
பதவ்யாக்யார்த்த நிலயாயை
பிந்துநாதாதி காரணாயை
மோக்ஷேச மஹிஷ்யை 100

ஸத்யாயை
புத்திமுக்தி பலப்ரதாயை
விக்ஞான தாயின்யை
ப்ரக்ஞாயை
ப்ரக்ஞான பலதாயின்யை
அஹங்கார கலாதீதாயை
பராசக்த்யை
பராத்பராயை நம: 108

[இதி கௌர்யஷ்டோத்தர
[சத நாமாவளி:

அஷ்டோத்தரசத நாமார்ச்சன பூஜாம் ஸமர்ப்பயாமி

## தேவி த்வாதச நாமப் போற்றி அகவல்

*விகாரி போற்றி விழுதிகழ் அழகி
சிகாமணி போற்றி சிகண்டி போற்றி
வேடமெ லாமுக சங்க பாடலொ
டாடல் பயின்ற அசலையாள் போற்றி
வேதக் குழலாள் வேதச் சொருபாள்

---

* 'போற்றி' என வருமிடங்களில் புஷ்பார்ச்சனை செய்யவும். இந்தத் தேவி த்வாதச நாமப் போற்றி அகவல் 'பார்வதிதேவி போற்றி அகவல்' என்ற நூலிலிருந்து எடுத்து இங்குப் பிரசுரிக்கப் பெற்றுள்ளது. அஃது அருட்கவி சேதுராமனால், அருணகிரிநாத சுவாமிகளின் நூல்களின் துணைகொண்டு ஆக்கப்பெற்றது. விலை 25 காசுகள். கிடைக்குமிடம்: அருளிசை S. V. சுப்ரமண்யம், 100, கல்லூரிச் சாலை, சென்னை-61.

வேதப் பார்வதி மெல்லியார் போற்றி
வேத புராணம் விளம்பி போற்றி
வேத விதக்ஷிணி வேரிலி போற்றி
வேத வித்தகீ விமா விராகிணி
ஆதி சத்திசா மாதேவி போற்றி
வேதா மக்கலை ரூபாள் போற்றி
மாதா போற்றி மாகாளி போற்றி
ஜோதி யங்கணர் பாகம் ஒன்றிய
ஆதி அந்தமும் ஆனவள் போற்றி

அஷ்ட மாத்ருகா ஸஹித ஸ்ரீ ராஜ ராஜேச்வர்யை நம:
நானாவித பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி
தூப மாக்ராபயாமி; தீபம் தர்சயாமி;
தூப தீபாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி

ஸ்ரீ ராஜ ராஜேச்வர்யை நம: (என்று சொல்லி நிவேதனப் பொருள்களின்மேல் கலச நீரைத் தெளிக்கவும். கையில் புஷ்பங்களை எடுத்துக்கொண்டு நிவேதனத்தைத் தேவிக்குக் காட்டிய பின் கூறவும்)

நிவேதனம் ஸமர்ப்பயாமி
நிவேதனாநந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
ஹஸ்த ப்ரக்ஷாளனம் ,,
பாத ப்ரக்ஷாளனம் ,,
'பூகீபல ஸமாயுக்தம் நாகவல்லீ தளைர்யுதம்
கர்ப்பூர சூர்ண ஸம்யுக்தம் தாம்பூலம் ப்ரதிக்ருஹ்யதாம்'
தாம்பூலம் ஸமர்ப்பயாமி

(கர்ப்பூரத்தைக் கையில் ஏற்றிவைத்துக்கொண்டு சொல்லவும்.)

'கர்ப்பூர வர்த்தி ஸம்யுக்தம் வஹ்னினா யோஜிதஞ்சயத் |
ஆரார்த்திகம் இதம் த்வ்யம் க்ருஹாண ஜகதீச்வரீ ||'
ரக்ஷாம் தாரயாமி (கையில் பூ எடுத்துக் கர்ப்பூர ஹாரத்தியைச் சுற்றித் தேவிக்கு ஸமர்ப்பிக்கவும்)
ஸமஸ்த ஷோடசோப சாரான் ஸமர்ப்பயாமி
ஸர்வோப சாரான் ,,

## நமஸ்காரம்

ஸர்வ மங்கள மாங்கல்யே சிவே
ஸர்வார்த்த ஸாதிகே |
சரண்யே த்ரியம்பகே கௌரி
நாராயணி நமோஸ்துதே ||

[பக்கம் 8, 9-இல் உள்ள தோத்திரங்களையும் அவை போன்ற வேறு தோத்திரங்களையும் ஈண்டும் சொல்லிக் கொள்ளலாம்.]

தேவ்யை நம: அநேக கோடி ப்ரதக்ஷிண
(ஸாஷ்டாங்க—பஞ்சாங்க) நமஸ்காரான்
ஸமர்ப்பயாமி; ஸமஸ்தாபராதான் க்ஷமஸ்வ;

"அந்யதா சரணம் நாஸ்தி த்வமேவ சரணம் மம
தஸ்மாத் காருண்ய பாவேன ரக்ஷரக்ஷ மஹேச்வரி"

"குபுத்ரோ ஜாயேத க்வசிதபி குமாதா நபவதி
மத்ஸம: பாதகீ நாஸ்தி பாபக்நீ த்வத்ஸமா நஹி
ஏவம் க்ஞாத்வா மஹாதேவி யதாயோக்யம் ததாகுரு"

"மாதாச பார்வதீ தேவீ பிதாதேவோ மஹேச்வர:
பாந்தவா: சிவபக்தாஸ்ச ஸ்வதேசோ புவநத் த்ரயம்"

லோகா: ஸமஸ்தா: ஸுகிநோ பவந்து ;
ஸர்வத்ர ஸந்மங்களாநி ஸந்து;
ஸர்வம் ப்ரஹ்மார்ப்பண மஸ்து.

## மங்கள ஹாரத்தி

ஸ்ரீ ராஜ ராஜேச் வரீ! தேவ தேவீ!
ஜய மங்களம் நித்ய சுப மங்களம்.

சுபம்

# மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்

பெருந்தே னிறைக்கும் நறைக்கூந்தற்
பிடியே! வருக! முழுஞானப்
பெருக்கே! வருக! பிறைமவுலிப்
பெம்மான் முக்கட் சுடர்க்கிடும்நல்

விருந்தே! வருக! மும்முதற்கும்
வித்தே! வருக! வித்தின்றி
விளைந்த பரமா நந்தத்தின்
விளைவே! வருக! பழமறையின்




குருந்தே! வருக! அருள்பழுத்த
கொம்பே! வருக! திருக்கடைக்கண்
கொழித்த கருணைப் பெருவெள்ளம்
குடைவார் பிறவிப் பெரும்பிணிக்கோர்

மருந்தே! வருக! பசுங்குதலை
மழலைக் கிளியே! வருகவே!
மலயத் துவஜன் பெற்றபெரு
வாழ்வே! வருக! வருகவே!

— குமரகுருபர சுவாமிகள்

# விற்பனைக்குரிய புத்தகங்கள்

| | ரூ | காசு |
|---|---|---|
| *அருட்புகழ் (நாகை முதலிய தலப் பாடல்கள்) | 0 | 75 |
| அருணகிரிநாதர் தோத்திர மஞ்சரி | 0 | 75 |
| ஆடும்பரிவேல் அணிசேவல் விருத்தங்கள் | ........ | |
| *இருடியர்பட்டி அருட்புகழ் | 0 | 15 |
| *காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸந்நிதி முறை | 1 | 00 |
| சேய்த்தொண்டர் புராணம்-முருகனடியார்களின் சரிதங்கள்—பாடல் (முழு காலிகா கட்டு) | 8 | 00 |
| திருப்பழன ஸ்தல புராண வசனம் | 1 | 00 |
| திருமுருகன் ஹரஹரோ ஹரா கும்மி | 0 | 25 |
| தேவியும் அருணகிரியாரும் (ஆராய்ச்சி நூல்) | 5 | 00 |
| பார்வதி தேவி போற்றி அகவல் | 0 | 25 |
| *மாயூரம் அருட்புகழ் | 0 | 30 |
| வழிகாட்டும் வான்பொருள் இருடியர்பட்டி அடிகளார் வரலாறு | 2 | 75 |
| *வள்ளிமலை அருட்புகழ் | 0 | 30 |
| வள்ளிமலை வள்ளல் (வள்ளிமலைத் திருப்புகழ்ச் சச்சிதாநந்த சுவாமிகளின் சரிதம்) | 2 | 50 |
| வைஷ்ணவி சந்நிதி முறை தொகுதி I | 1 | 00 |
| வைஷ்ணவி சந்நிதி முறை தொகுதி II | 3 | 00 |
| வைஷ்ணவி துதிப்பா மஞ்சரி | 0 | 30 |

* இக் குறியுள்ளவை அருட்கவி சேதுராமனால் பாடப் பெற்றவை.

கிடைக்குமிடங்கள் :

(1) அருளிசை S. V. சுப்ரமண்யன்,
100, கல்லூரிச் சாலை, நங்கைநல்லூர்,
சென்னை-61.

(2) புக்ஸ் இந்தியா பிரைவேட் லிமிடெட்,
134/135, பவழக்காரத் தெரு,
சென்னை-1.